"ஆலயம் தொழுவது சாலவும் நன்று"



ஓம்

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## —: திருக்கழுக்குன்றம் :—

# ஸ்தலபுராண வசனம்.







நூலாசிரியர்:—

பண்டிட் - **S R.** நமசிவாயராஜயோகி,

சுதேச வயித்தியம் திருக்கழுக்குன்றம்.

பிரசுர கர்த்தர்:— பிரதி 1-க்கு விலை அணா 2.

**N.** ஜெயராமன், திருக்கழுக்குன்றம்.

1938] (9-ம் பதிப்பு.) [வெகுதான்யஹூ

சென்னையில் விற்குமிடம்:—

சை. ந. பாலசுந்தரம், **Proprietor.**

ஸ்ரீ சாது இரத்தின சற்குரு புத்தகசாலை,

நெ. 47, நயினியப்ப நாய்க்கன் தெரு, P. T. மதராஸ்.

"பக்தி செய்தால் முத்தி பெறலாம்"

The Best Blood Purifier & Nerve - Invigorator.

(1) கர்ம ரோகஹரி என்னும் மன்மத சிந்தாமணி லேகியம்:—சர்வ ரோகங்களையும் கண்டித்து, சரீரத்திலுண்டாயிருக்கும் துர்நீரை வெளியாக்கி, நரம்புகளுக்கு பலத்தைக் கொடுத்து, உடலை வளர்த்து, உயிரை ரக்ஷிக்கும். போகத்தில் ஊக்கம் - தளராமை - மனோற்சாகம் கொடுக்கும். ஸ்திரீகளுக்கு சூதக வாய்வைக் கண்டித்து, சந்தான விருத்தியைக் கொடுக்கும். 50 - வருஷ அநுபோகம். இந்தியா - பர்மா - சிலோன் - மலேயநாடுகள் - பினங்கு - சிங்கப்பூர் - நெட்டால் முதலிய தூரதேச வாசிகளால் புகழ் பெற்றது.

| | |
|---|---|
| 10-பலம் டப்பி 1-க்கு | ரூ. 2—8—0 |
| நவசக்தி உப்பு சேர்த்தால் | ரூ. 3—8—0 |
| அயகாந்த செந்தூரம் 60. பொட்டளம் சேர்த்து | ரூ. 4—0—0. |
| ☞ இந்தியத் தபாற் கூலி டப்பி 1-க்கு 0-12-0. | (Foreign) |
| பர்மா - சிலோன் - தபாற் கூலி | ரூ. 1—0—0. |
| நெட்டால் | ரூ. 1—8—0. |

(2) மலபந்த நிவாரணி :—

மனுஷ்ய கோடிகளுக்கு உண்டாகும் வியாதிகள் யாவும் மலபந்தத்தினு லென்பது உண்மை. மலபந்தம் நீங்கினுல், சர்வ வியாதிகளும் நிவாரணமாகும். இந்த லேகியம் சாப்பிடுவதற்கு ருசியாயும் பத்தியமில்லாமலு மிருக்கும். இரவில் சாப்பிட்டு படுக்கும்போது கெச்சைக்காய் அளவு சாப்பிட்டு உறங்கினுல் காலையில் மலப்பிரவர்த்தி சுகமாய் நடக்கும்.

10-பலம் டப்பி 1-க்கு தபாற் கூலியுட் ரூ 2—8—0.

குடும்ப வாழ்க்கையி லீடுபட்டுள்ள சகோதர சகோதரிகளுக்குரிய சிற்றின்ப அசல் மதன நூல்கள்.

1. கொக்கோக வைபவம் என்னும் மன்மதன் திருவிளையாடல் - 64 சிற்றின்ப படங்களுடன் சுமார் 400-பக்கங்கள் கொண்டது, தபாற் கூலியுட்பட விலை ரூ. 2-8-0
2. கணவன் மனைவி காமகலா ரகஸ்யம் விலை ரூ. 2-8-0
3. சதிபதிகள் மதனலீலா இன்ப தத்துவம் ரூ. 2-8-0

☞ இம் மூன்று புத்தகங்களையும் ஒரே சமயத்தில் வாங்கும் இந்திய வாசிகளுக்கு ரூ. 5—0—0
பினங்கு - சிங்கப்பூர் - பர்மா - நெட்டால் - மலேய நாட்டவருக்கு ரூ. 7—0—0

4. ஆயுர்வேத ஆசான், 30-நாளில் ஆயுர்வேத உண்மைகளை அறிவித்து, சுதேச வயித்தியர்களாக்க வல்லது.
தபாற் கூலியுட்பட ரூ. 2—8—0
வெளி நாட்டா (Foreign) ருக்கு ரூ. 3—0—0

(3-ம் பக்கம் பார்க்கவும்.)

"சிவத்தைப் பேணிற் தவத்திற் குறுதி"

3/3



ஓம்

திருச்சிற்றம்பலம்.

உருத்ரகோடி - பக்ஷிதீர்த்தம் - ம்ருத்திகை
சஞ்சீவி பர்வதம் என்று வழங்கும்

# திருக்கழுக்குன்றம்

# ஸ்தலபுராண வசனம்.




நூலாசிரியர்:—

பண்டிட் - S. R. நமசிவாய ராஜயோகி,
சுதேச வயித்தியம், திருக்கழுக்குன்றம்.



பிரசுரகர்த்தா:—

N. ஜெயராமன்:—திருக்கழுக்குன்றம்.

(9-ம் பதிப்பு பல திருத்தங்களுடன்)

விலை அணா 2]  1938.  [வெகுதான்ய௵

சென்னையில் விற்குமிடம் :—

சை. ந. பாலசுந்தரம், **Proprietor.**

ஸ்ரீசாது இரத்தின சற்குரு புத்தகசாலை,

நெ. 47, நயினியப்ப நாய்க்கன் வீதி, P. T. மதராஸ்.




ஓம்:

# ஸ்ரீ வேதகிரீஸ்வரர் அஷ்டகம்.

1. வ்யோமா நிலாநல ஜலாசல சந்த்ரசூர்ய,
சைதன்ய கல்பித சரீர விராஜிதாய ।
ருக்வாதி வேதகிரீ ஸ்ருங்க நிகேதநாய,
ஸ்ரீ ருத்திரகோடி நிலயாய நமஸ்ஸிவாய ॥

2. கற்பூர சங்கதவ ளாக்ருதி சந்த்ர காந்தா,
முக்தாபல ஸ்படிக ஸன்னிப விக்ரஹாய ।
கஸ்தூரி குங்கும ஹிமாம் புவிலேபநாய,
ஸ்ரீ ருத்ரகோடி நிலயாய நமஸ்ஸிவாய ॥

3. ஸௌந்தர்ய நாயக முகாம்புஜ பிருங்கபூத,
சந்த்ரார்க்க வன்ஹி நிலயாய ஸதாசிவாய !
அணிமாதி தாய கருணம்ருத ஸாகராய,
ஸ்ரீ ருத்ரகோடி நிலயாய நமஸ்ஸிவாய ॥

4. கங்கா ஜலாக்ர நிலயாய கலாமயாய,
காமாந்தக திரிபுரக்த விலபநாய ।
கங்காதராய கருத்துவஜ ஸேவிதாய,
ஸ்ரீ ருத்திரகோடி நிலயாய நமஸ்ஸிவாய ॥

5. க்ருதரா சலேந்த்ர நிலயாய கிரீஸ்வராய,
தத்வாதி ஸித்த சுர பூஜிதா வந்திதாய,
ஸித்த தியோக புருஷாய திகம்பராய,
ஸ்ரீ ருத்ரகோடி நிலயாய நமஸ்ஸிவாய ॥

6. பஞ்சாக்ஷராய பவசாகர தாணய,
பஞ்சாஸ்ய வர்ம வசநாய பராத் பராய ।
பஞ்சாக்ஷராய நிகமா சல நாயகாய,
ஸ்ரீ ருத்ரகோடி நிலயாய நமஸ்ஸிவாய ॥

7. வேதாந்த முக்ய விபவாயகி ரீஸ்வராய,
வேதாந்த வேத்ய ஸரஸாய வீசக்ஷணய ।
வேதாய வேத தாரகாய விஷாசணய,
ஸ்ரீ ருத்ரகோடி நிலயாய நமஸ்ஸிவாய ॥

8. ஆதார சக்தி குடிலாசந பஞ்சகாய,
பிரம்ஹாண்ட கல்பித கமலாய விக்ரஹாய ।
ப்ரஸாத ஷோடச கமலாய விஸ்வமூர்த்தே,
ஸ்ரீ ருத்ரகோடி நிலயாய நமஸ்ஸிவாய ॥

---

ஸ்ரீவேதமலையில் சுவாமி பெயர்;—ஸ்ரீ வேதகிரீஸ்வரர். அம்மன் பெயர்;—போகசக்தி;— மலைச்சொக்கநாயகி, தாழக்கோவிலில், சுரகுருவேந்தனல் பிரதிஷ்டை செய்த லிங்கம்;—ஸ்ரீபக்தவற்சலர். ஞானசக்தி;—ஸ்ரீ திரிபுர சுந்தரி அம்மன்; ஸ்தல விருக்ஷம்;—கதலி. வாழை,

☞ பெரிய தேவாரகஸ்ய படம் 0-1-0.
100-க்கு ரூ. 4-0-0.

## திருக்கழுக்குன்றம்



## திருமலைக்கோயில்

அம்பாள் படம் 0-0-6, 100-க்கு ரூ. 1-4-0.
திரிபுரசுந்தரி அம்மாள் பதிகம் அணா 1.

" தெய்வ நிகேதல்."

☞ தினசரி காலை 11-மணிக்கு திருமலையில் பூஷா - விதாதர என்னும் இரு கழுகுகள் வந்து சருக்கரைப் பொங்கல் அன்னம் சாப்பிடுவது வெகுகால மகிமை.

" தெய்வம்சிறிள் கைதவம் மாளும் "

ஓம்:

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# முன்னுரை.

அடியேன் இந்த க்ஷேத்திரத்தில் நிரந்தர வாசியாய் வந்த 1904-ம் வருஷம் முதற்கொண்டு, இந்த க்ஷேத்திர மான்மியங்களைக் குறிக்கும் அநேக கிரந்தங்களைப் பார்த்து, அறிவாளிகள் முன்னிலையில் ஆராய்ச்சிசெய்து, எம்போன்ற ஏழை அறிவுள்ளவர்கள் எளிதில் அறியக்கூடிய மாதிரி ஒரு அணா, இரண்டணா, இரண்டு ரூபா விலையுள்ள பல பதிப்புக்கள் லக்ஷக்கணக்காக அச்சிட்டு வெளியிட்டுள்ளேன். சில வருஷங்களாக சரீர அசவுகரியத்தை முன்னிட்டு, அக்காரியங்களில் தலையிட முடியாது விட்டது. அக்காலத்தில் ஆசை வெட்கமறியாதான் செய்கைபோல், பலர் பலவகை வெளியீடுகளைப் பரப்பினார்கள். அவை அறிவாளர்கள் பலருக்கு மனத்திருப்தியில்லாது, அடியேனைக் கொண்டே, தல மஹிமையைப் பரப்பவேண்டுமென்று கேட்டுக்கொண்டபடி, இவ்வொன்பதாம் பதிப்பு, சுருக்கமாக வெளியிடத் துணிந்தேன். அன்பர்கள் குற்றம் நீக்கிக்குணம் கொள்வாரெனப் பிரார்த்திக்கின்றேன். ஓம் சுபம்.

[signature]

பக்ஷி தீர்த்தம்.
14—4—1938

" எவ்வுயிரும் நீங்கா துறையும் இறை சிவனென்று
எவ்வுயிர்க்கும் அன்பாயிரு " — சைவ சமயநெறி.

ஓம்:

ஸ்ரீவேதகிரீஸ்வரர் துணை.

  

"உருத்திரகோடித்தலம்" என்னும்

## —: திருக்கழுக்குன்றம் :—

# ஸ்தலபுராணம் அகவல்

(நிலைமண்டில யாசிரியப்பா.)

கேண்மின் கேண்மின் கேண்மின் கேண்மின்
மாண்மிக் கோங்கிய மாநிலத்தவரே
கேண்மின் கேண்மின் கேண்மின் கேண்மின்
நெடுங்கட லுடையுடீஇ நிலவுமொண் நிலமகள்
தடங்கெழு முகமெனுந் தகுதொண்டை நாட்டில்
விண்ணகத் தவரொடுவியன் மண்ணகத்தவர்
நண்ணிலந் திறைஞ்சு நலமுயர் சிவதலம்.
முப்பானி ரண்டில் முதிர்புகழ் அநந்தனுற்
செப்பரும் பலவளஞ் செறிந்தொளிர் சிர்ப்பதி
வேதமோர் நான்கும்விது முடிப்பரமனை
யாதாம்பெருக வந்தருச்சித்த மாண்பதி
உருத்திர கோடியர் ஒருங்கினிதெய்தி
அருத்தி யொடுதுதித்து அருச்சித்த பொற்பதி
தண்டுல வணிமால் சதுமுக னிந்திரன்
வண்டறை மலர்த்தார் வனநந்திதேவர்
அமரர் எண்வசுக்கள் அந்தணரா தியோர்
நம எனத் துதித்தருள் நண்ணிய மாதலம்.

பசுவொடு வராகம் பன்முறை வலம்வந்து
உசிதமாம்தேவ உருப்பெற்ற க்ஷேத்திரம்
இறைசண்டன் பிரசண்ட னென்றிருகழுகு
இறையேத்தி முன்யுகத்தின் முத்திபெற்றஊர்
சாற்று சம்பாதி சடாயு என்றிடுபெய
ரேற்றுடன்மிகக் கொண்டிரு கழுகரசர்கள்
திரேதாயுகத்திற் சிவார்ச்சனை புரிந்துட்
பராவி நன் முத்திப்பலனுற்ற பூம்பதி
உத்தம துவாபர யுகத்தி னிற்சம்பு
குத்தன் மாகுத்தனெனப் பெயர்கொண்ட
இருடியரிருவர் இயம்பு மெய்ச்சிவமே
பெரிதெனச் சத்தியே பெரிதென இன்னணம்
பன்னிமா தர்க்கப்படலு முளங்கொண்டு
என்னிறை சிவத்தொடு மியற்சத்தியும்வந்
திகலுமிம் மாற்றமேற்றிடா தேற்றிடாது.
அகலுவீர் தர்க்கமீங் க கலுவீ ரெனவே
இனிதாய்ப் புகலவுமெட் கடையேனும்
மனதினிற் கொளாது மறுத்ததாற் சாபம்
நேர்ந்தது வினையால் நிகழ் கழுகுருவஞ்
சார்ந்துமின் அநேகநாட்ட கு தவமுனுற்றி
அகங்கனிந்தன் புதன்அரனை அருச்சித்துத்
திகழ்முத்தி பெற்றதெய் வீகத்திருத்தலம்
பூஷாவிதாதா எனப்புகல் தவத்தினர்
பிடார்தவநிலை பிறங்கிய காலையிற்
சிவபெருமா னுரைசெய்த வாக்கினை
அவமதிப்பாக்கி அருண்முத்தி வேண்டித்
தடுத்ததாற் சாபமுந் தந்திடக் கழுகுடம்பு
அடுத்தது கடையுகமாகிக் கலியுகத்து
எத்திசையோரும் வந்தெளிதி னிற் காணப்
பத்தியாய் வேதபருவதம் வலஞ்சூழ்ந்து
அந்திவண்ணன் தாள்அன்புடன் சிந்தித்து
அந்தமா முத்திஅடைதற் கநுதினம்

உளத்திற் பரிவாய் ஓரிரு கழுகுகள்
வளத்தொடு அம்முத்திக்கு வழிபடுபெரும்பதி
பரசிவன் தருமறைப் பாதுகை யதனைப்
பெரிதன் பகத்திற்பிறங்கக் கொணர்ந்தே
மாணிக்க வாசகர் வைத்தா தனம்போற்
காணிக்கை யாகக்கவின் பதிகஞ் சொலக்
குருவடிவானுர் குணமொடு காட்டி
உரிமையால் ஆண்டருளுதவு தெய்வத்தலம்
விரிசிறை பனிமுரன் மேதகுபொதும்பர்ச்
சிரபுரக் குருந்தொண்டிரு வாமூரா
சேவற்றெருழற்கிறை இசையச் செய்திட்ட
நாவலூர் நாவல நற் கற்பகமாம்
மூவர்களுரைத்த முதிர்தமிழ்ச் சொற்சுவைப்
பாவெனும் பதிகப்பண்பு கொள்பொற்புரி
இத்தகு மஹத்துவ மெய்திய தலமாம்
வித்தக வேத கிரித்தல மேவியும்
செறிசங்குத் தடந்தீர்த்தத்திற் ரேய்ந்து
நன்னெறி காட்டும் வெண்ணீற்றினை அணிந்தும்
செய்கடன் முடித்துஞ் சிரமேற்ற மதிரு
கைகள்கூப்பியும் கருத்துமேற் கொண்டும்
வண்டுவன வேழத்தை வழுத்தியும்
வண்டில் வேலாயுத வள்ளலைப் போற்றியும்
கேகையார் வேதகிரி வலம் புரிந்தும்
வாகைசேர் மலையடிமண் மருந்தருந்தியும்
சிகரகோபுரமார் தேவாலயம் பணிந்தும்
அகர எழுத்துப் போலாதியாம் பரனைப்
பெண்ணினல்லாளெனப் பேர்பெறும் உமையை
எண்ணிச் சேவித்தியன் மணமலர்கொண்டு
அருச்சனை புரிந்தும் ஆடியும் பாடியும்
விரிச்சி வாழ்த்தியும் வேண்டித்துதித்தும்
தாசிவ சங்கர சம்போ கங்கா

தர மங்கள குணதாவர ஹர ஹர
பருணிதர் பராவும் பரமஹாதேவ
கருணைக் கடலே காத்தரு ளென்பிரேல்
அடருமூலம் பித்தறிவுண் மயக்கம்
கொடுமை செய்குடர் நோய் குன்மம் வெங்காசம்
கண்ணோய் தலைவலி கடுவனுதிய
திண்ணிய வியாதிகள் தீர்ந்தினிதுய்வீர்
பேய்பிசாசு அரக்கி பிரமராக்ஷசு
தீய வேதாளந் திடமுறு சடாமுனி
பில்லி வைப் பேவல்கள் பெருஞ்சூன்ய மிவை
எல்லின்முன் பனியாயிட ரினைத்தவிர்வீர்
நெடுநாள் வஞ்சகம் நெஞ்சில் வைத்தடரும்
படைசூழ்ந் ததிர்க்கும் பகைஞரை வெல்வீர்
சேடனைப் போலுந்திகழ் கல்விகற்றுவி
சேடனென் றிடவே சிறந்த சிரேற்பீர்
பிறவியில் யானைவண் புரவி பொற்சிவிகை
உடையாராஞ் சம்பத்தோங்கவே உறைவீர்
கற்பனைதீர்ந்து உட்கருத்து ஒருமித்து
அற்புதமாகத் தீர்க்காயுளுற் றிருப்பீர்
சொற்பெறு கல்வித்துறையிலும் விற்பனம்
பற்பலதொழி லிலும்பலன்மிக் செய்துவீர்
கற்புறுசிந்தை வங்கணங்குண மாக்ஷிசால்
பொற்புறு மாதர்தம் புதுமணம் புரிவீர்
தண்ணிய குணஞ்சிர் தரு சதுர்வடிவு
வண்ணமார்ந் தொளிரு நன் மக்களைப்பெறுவீர்
நுவலிகத்தின்ப நுகர்ந்து வானமார்கள்
தவனிவனென வினிச்சாந்தின்பு நுகர்வீர்
அவமுறும் பவப்பிணி அகன்றுபின் கைலையில்
சிவசாரூபஞ் செறிந்து வாழ்குவீரே.

ஓம் ஸாந்தி! ஸாந்தி!! ஸாந்தி!!!

---

" பக்தி வலையிற் படுவோன் காண்க. "

" சிவபக்தி பவரோகத்தை மாற்றும் "



சிவமயம்.

## —: திருக்கழுக்குன்றம் :—

# ஸ்தலபுராண வசனம்.

" ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகை பொன்னம்பலவன்
ஞானகுரு வாணியை உண்ணு "

ஸ்ரீ வண்வேன விநாயகர் துதி.

" பூவேழம் பொதிகளாம் புரவேழம் பூவழியிற்
பொழியும் பைந்தேன்
காவேழம் புதமென்னும் கருவேழம் புரத்தினெடும்
காக்குங் காவற்
கோவேழம் பயந்த முத்தங் கொடுத்த கனிக்கடுத்த
கனிக்குவை யோடப்பம்
மாவேழம் படைத்தவண்டு வனவேழம் புரக்க
வணக்கஞ் செய்வாம். " என்றும்

" உருத்ரகோடி க்ரேஸ்ருங்கம்
தூரே த்ருஷ்ட்வா சிவாத்மஹம்
சம்ஸார பயநிர்ம் முக்தஸ்ய சிவசாயுஜ்ய
மாப்ன யாத்:
காமாத் குரோதாஸ் ஸாபலோப
அக்யான யானதோபிவா ।
ருத்ரகோட்யாம் ஏகராத்ர: உஷித்வா
ருத்ராதாம் ரிஜேத் ॥ "

## —: திருக்கழுக்குன்றம் :—

# ஸ்தலபுராணச் சுருக்கம்.





### 1. புராண வரலாறு.

ஓர் காலத்தில் வேத வியாசரது அன்புக்குரிய சிஷர் சூத மாமுனிவர், தெய்வ லோகம் போல் விளங்கும் நைமிசாரண்யம் சென்றார். அவ்வாரண்யத்தில் வசிக்கும் முனிசிரேஷ்டர்கள், தெய்விகமாக வந்த சூத முனிவரைப் பார்த்து, வந்தனை வழிபாடுடன் உபசரித்து, ஆசனத்தமர்த்தி, சோடசோபசாரஞ்செய்து, "சுவாமிகளே! தேவரீர் இங்கு எழுந்தருளியது அடியேங்கள் செய்த பாக்கியம்! தங்கள் தரிசன மாத்திரம் எங்கள் அஞ்ஞானமானது, சூரியன் முன்பனிபோல் நீங்கிற்று. சுவாமின்! தங்களைப் பார்த்த மாத்திரம் எங்களுக்குத் திடீரென ஓர் ஆசை உண்டாயிருக்கிறது; அதனைப் பூர்த்திசெய்யத் தாங்கள் கருணை புரிதல் வேண்டும்.

சுவாமின்! ஸ்ரீகைலாசபதியாகிய சிவபெருமான் பக்த கோடிகள் உய்யும்பொருட்டு, இப்பூவுலகத்தில் அவதரித்துப் பல விதமான லீலைகள் செய்த சரித்திரங்களை அடிக்கடி எங்களுக்குப் போதித்துக் கிருதார்த்தர்களாக்கினீர்கள். இப்போது உருத்திர கோடி மஹா க்ஷேத்திர மஹாத்மியத்தைப் பற்றிக் கேட்கவேண்டுமென்கிற விருப்பம் உண்டாயிருக்கிறது. தாங்கள் கிருபை வைத்து, எங்கள் மனோபீஷ்டத்தைப் பூர்த்திசெய்யவேண்டும்" என்றுசவுனகாதி முனிவர்கள் சூத முனிவரைப் பிரார்த்தித்துக் கேட்டார்கள்.

சூதமுனிவர் மனம் கசிந்து, இரு காங்களையும் சிரமேற் கூப்பி, ஸ்ரீ வேதகிரிப்பெருமானையும் பெண்ணினல்லாள் அம்மையாரையும் ஒரு முகூர்த்த காலம் மனதினுல் தியானித்து, ஆநந்த பரவசராய், 'முனிசிரேஷ்டர்களே' நினைக்கநினைக்கமனமுருகும் திருக்கழுக்குன்ற

மென்னும் உருத்திரகோடி மான்மியத்தைப்பற்றி, உங்களுக்கு முன்னம் விரிவாகச் சொல்லி யிருக்கிறே னல்லவா ? இப்போது அதைச் சுருக்கமாகச் சொல்லுகிறேன்; கவனமாய்க் கேளுங்கள். இந்த க்ஷேத்திரமானது மற்ற ஸ்தலங்கள்போல், சாதாரணமான ஸ்தல மல்ல; மூர்த்தி-தலம்-தீர்த்தம் மூன்றும்ஒருங்கே அமையப்பெற்றது. வேதங்கள் பூசித்ததால் ஸ்ரீ வேதபுரி என்றும், கோடி உருத்திரர்கள் பூஜித்ததால் உருத்திரகோடி யென்றும், நந்தியெம்பெருமான் பூஜித்த தால் நந்திபுரி யென்றும், பிர்ம்மா பூஜித்ததால் பிரம புரி யென்றும், மஹாவிஷ்ணு பூஜித்ததால் வேத நாராயண புர மென்றும், துவாத சாதித்தர்கள் பூஜித்ததால் ஆதித்தபுரி அல்லது பரிதிபுரி யென்றும், முநிகணங்கள் பூஜித்ததால் முநிகணநாதபுர மென்றும், தேவேந்திரன் பூஜித்ததால் இந்திரபுரி யென்றும், அஷ்ட வஸுக்கள் பூஜித்ததால் வஸுபுரி யென்றும், கழுருகள் பூஜித்ததால் கழுகா சல மேன்றும் சொல்லப்பட்டிருக்கின்றன.

இந்த க்ஷேத்திரம் காஞ்சிக்குத் தென்கிழக்கில், நாலு யோசனை தூரம், சமூத்திரத்துக்கு மேற்கில், ஒரு யோசனை தூரம், இமய மலைக்கும் கங்கா நதிக்கும் தென்பாரிசத்தில் இருநூறு யோசனை தூரம், பிநாகினி-கடிலம் இந்த நதிகளுக்கு வட பாரிசத்தில் பத்து யோசனை தூரம் விஸ்தீரணமுள்ளது.

இந்த க்ஷேத்திர மான்மியம் ஸ்காந்த புராணம் நந்தீஸ்வர சம் வாதத்திலும், சிவ புராணங்களுள் பௌஷியோத்தர புராண-லிங்க புராணங்களிலும் சமஸ்கிருத ஸ்லோகங்களாகச் சொல்லப்பட் டிருக்கிறது.

## 2. வேதமலைச் சிறப்பு

இருக்கு - யசுர் - சாமம் - அதர்வணம் என்னும் நான்கு வேதங்களே நான்கு மலைகளாக அமர்ந்து, அதர்வண வேத சிரசில் சிவபெருமான் வாழைக்குருத்து உருவாகச்சுயம்புவாய் எழுந்தருளி யிருக்கிறார். அப்பெருமானைச் சுற்றிலும், இந்திரன்-பிர்ம்மா-மஹா விஷ்ணு-நந்தி - காசி ஓங்கார கடத்தில் கழுகு முநிவர்களுக்கு உப தேசித்த தக்ஷிணாமூர்த்தி - சோமாஸ்கந்தர் - போக சக்தி முதலிய அமர்ந்திருக்கக் காணலாம். இந்த சுயம்பு மூர்த்திகள். அநாதி யென்றே சொல்லுதல் பொருந்தும். ☞ பக்ஷி தரிசன தேவ ரகஸ்ய படத்தில் காணலாம்.

### 3. உருத்திரகோடிச் சிறப்பு.

கோடி உருத்திரர்கள் அசுரர்களைக் கொன்ற பாப தோஷங்களை நிவிர்த்திப்பதற்கு, வேதமலையைப் பூஜித்தார்கள். அவர்களால் பிரதிஷ்டை செய்யப்பட்ட லிங்கம் உருத்திரகோடீஸ்வரர்; அம்பாள் பெயர் அபிராமி நாயகி; இந்த க்ஷேத்திரம் வேத மலைக்கும், சங்க தீர்த்தத்துக்கும் ஆக்நேய திக்கிலுள்ளது. தீர்த்தம்:-உருத்திரகோடி தீர்த்தம். இந்த க்ஷேத்திரம் ஆதி யென்றேசொல்லுதல் பொருந்தும்.

### 4. நந்திதேவர் சாப வரலாறு.

சிவபெருமான் திருக்கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் கைலயங்கிரிக்கு, பிர்ம்ம - விஷ்ணு - இந்திராதி சகல தேவர்களும் தினசரி தரிசனத்துக்குப் போகிற வழக்கம். ஓர் காலத்தில் விஷ்ணு வானவர் கைலயங்கிரிக்குச் சிவபெருமானைத் தரிசிக்க வந்து, தான் ஏறிவந்த கருடாழ்வாரை வாசலில் நிறுத்தி, நந்திதேவருக்கு நமஸ்காரம் செய்து, உள்ளே சென்றார். வெளியே நின்ற கருடன் அகங்கார மேலீட்டினால், நந்தியெம்பெருமானை அலக்ஷியமாய் நினைத்து, "நீ இரந்துண்பவன் வாகனம்;" என்றான். நந்திதேவர் கோபமுற்று, சர்வ சங்கார காலத்தில் தோன்றும் உக்ர மூர்த்தத்தை யொப்ப பெருமூச்சு விட்டார். அந்தச்சுவாசத்தினால் கருடன் தானிருக்கு மிடத்தைவிட்டுப் பெயர்ந்து உருண்டு, சிறகுகள் ஒடிந்து, உடல் நொறுங்கி, மஹத்தானகஷ்டத்தை அடைந்து, மஹாவிஷ்ணுவைத் தியானித்தான். சிவ தரிசனத்திலீடுபட்டு நிற்கும் வைகுந்த வாசன், கருடன் அடைந்துள்ள துக்கத்தை நினைத்து வருந்தி, சிவபெருமானிடம் முறையிட, பெருமான், நந்திதேவருக்குச் சமாதானம் சொல்லும்படி உத்திரவிட்டார். நந்திதேவரிடம் மஹா விஷ்ணு வந்து நமஸ்கரித்து மன்னிக்கும்படி வேண்டியும், நந்திதேவர் இரக்கங் கொண்டாரில்லை. சிவபெருமான் நந்திதேவரை வரவழைத்துச் சமாதானம் சொல்லிக் கருடனை மீட்டு அனுப்பினார்.

நந்திதேவர் சிவபெருமானது ஆக்கினையை உல்லங்கனம் செய்த பாப தோஷங்களுக்குப்பரிஹாரம் வேண்டிச்சிவபெருமானை வேண்ட, அவர் ஸ்ரீ வேதகிரியின் மஹிமைகளைச் சொல்லி அங்கு போய் தவஞ்செய்ய உத்திரவளித்தார்.

### 5. நந்திதேவர் தவம்.

தான் அடைந்த சிவாபராதத்தை நீக்கிக் கொள்ள வேண்டி, இத்தலத்தில் தவம் செய்துகொண்டிருந்தார். அவரது தவத்தைக் கெடுக்க, இந்திரனுல் ஏவப்பெற்ற திலோர்த்தமை, நந்தியின் சாபத்தால் பசு உருவம்பெற்று, சுரகுரு அரசன் வேட்டையாடிய போது, அவன் விடுத்த பாணத்தினுல், பசு உருவம் நீங்கி, தேவ கண்ணிகையானுள்; நந்திதேவர் தவம் செய்த இடம், தற்போது தாழக்கோயில் நந்தீதீர்த்தம் அருகாமையி லிருக்கிறது. நந்திதேவர் சிலா விக்கிரகம் அத்தீர்த்தக் கரையிலிருக்கத் தரிசிக்கலாம்.

### 6. மாயீகன் சாப விமோசனம்.

மாயீகன் என்னும் அசுரன், பன்றிகளைத்தின்பதற்கு மாயப்பன்றி உருவெடுத்து, வேதமலையில் திரிந்திருக்க, மார்க்கண்டேயர் மாயப் பன்றி உருவத்தை நிலைத்திருக்கச் சாபம் கொடுத்தார். சுரகுரு சக்கரவர்த்தி பாணத்தால் அந்தச்சாபம் நீங்கிப் பழைய மாயீகன் ஆனுன்.

### 7. அஷ்டவசுக்கள் தவம்:— சாப விமோசனம்.

காமதேனுவின் சாபத்தால், தன் உருக்கள் மாறி, மார்க்கண்டேயர் அநுக்கிரகத்தால், இவ் வேதமலையில் தவம் செய்து, பாவத்தை நீக்கிக் கொண்டார்கள்.

### 8. மஹாவிஷ்ணு சாப விமோசனம்.

தேவேந்திரன் விருத்தாசுரனேடு பலவகையான யுத்தம் செய்தும், அவனைக் கொல்ல முடியாது வருந்தி, மஹாவிஷ்ணுவிடம் முறையிட்டான். மஹாவிஷ்ணு மிக்க ரகஸ்யமாய் ததீசி முனிவரது முதுகெலும்பினுல் தான் அவ்வசுரன் இறப்பான் என்று சொல்லவும், இந்திரன் அம்முறை பாப மென்றெண்ணியும், தன் காரியம் முடியவேண்டு மென்னும் கருத்தோடு, அம் முனிவரிடம் யாசித்தான். அம் முனிவர் தீர்க்க திருஷ்டியாலறிந்து, இந்த யுக்தி மஹாவிஷ்ணுவினுல் சொல்லப்பட்டதென அறிந்து, வைகுந்தனுக்குச் சாபம் கொடுத்து, தன் முதுகு எலும்பை இந்திரனுக்கு கொடுத்து உயிர் துறந்தார். தேவேந்திரனுக்கும் சாபம் நேர்ந்தது.

இவ்விருவரும் பெற்ற சாபங்கள் இவ் வேதமலையில் தவஞ் செய்ய நீங்கின.

### 9. தேவேந்திரன் சாப விமோசம்.

தான் பெற்ற சாபத்தை நிவிர்த்திக்க, இவ் வேதமலையில் தவஞ் செய்தார்.

☞ தேவேந்திரன் சிவபெருமானைப் பூஜிப்பது இடி அபிஷேகமாக நாம் காணலாம். இது 12 மனுஷ்ய வருஷத்துக்கொருதரம் வேதமலையில் சிவபெருமானுக்கு நேரே விழுகிற வழக்கம் கடைசியில் 18-9-10 நடந்தது ; பிரமோதூதஸு புரட்டாசிமீ 25உயில் விழுந்த நீர் இடி வழக்கம் போலின்றி, கோயில் பிரகாரத்தில் விழுந்து, அங்குள்ள மட்பாண்டங்கள் சேதமாயின.

## 10. சிவ சுப்பிரமணியக்கடவுள் சாப விமோசனம்.

சிவ பெருமானுக்குப் பிரணவ மஹா மந்திரத்தின் அரிய பெரிய மஹிமைகளைக் கூறிய பெருமைக்காக, இவ் வேதமலையில் பக்தகோடிகளது துன்பத்தை நீக்க எழுந்தருளியிருக்கின்றார்.

## 11. பன்னிரு சூரியர்கள் சாபவிமோசனம்.

பங்தேகன் என்னும் அசுரனால் ஏற்பட்ட துன்பத்தை நீக்குவதற்கு, இவ்வேதமலையில் தவஞ்செய்து சுகம் பெற்றார்கள்.

## 12. அஷ்டகழுகுகள் தவம்: ஆறுகழுகுகள் சாப நிவிருத்தி: பூஷா - விதாதா இருகழுகுகள் இக் கலியுகத்தில் தவம்.

பிரம்மாவின் மானவஸீக புத்திரர்கள் எண்மர், சாரூப பதவியை வேண்டித் தவம் செய்தார்கள். சிவபெருமான் பிரத்தியக்ஷமானார். சாரூபத்தைவிட்டு சாயுச்சிய பதவியைக் கேட்டார்கள். ஒன்றை நினைத்து, மற்றொன்றைக் கேட்டதற்காக, எட்டு முனிவர்களும் கழுகுகளாகப் பிறக்கும்படி சபித்தார். அந்தச் சாபம் நீங்குவதற்காக கிரேதா யுகத்தில் சண்டன் - பிரசண்டன் என்னும் இரு முனிவர்கள் கழுகுகளாகப் பிறந்து, இம்மலையில் தவம்செய்து யுக முடிவில் சாயுஜ்ய பதவியைப் பெற்றன. திரேதா யுகத்தில் சம்பாதி - சடாயு என்னும் இரு கழுகுகள் தவஞ்செய்து முத்தி பெற்றன. துவாபர யுகத்தில் சம்புகுத்தன் - மாகுத்தன் இரு கழுகுகள் தவஞ்செய்து முத்தி அடைந்தன. கலியுகத்தில் பூஷா - விதாதா என்னும் இரு கழுகுகள் தவம் செய்கின்றன.

☞ இப்போது இரு கழுகுகள் தினசரி காலை 11-மணி சுமாருக்கு, வேத மலையில் பக்ஷி பாறையில் அமர்ந்து, சைவப்பண்டாரம் கொடுக்கும்நெய்-சக்கரைப்பொங்கல் அன்னத்தைச்சாப்பிட்டுப் போகின்றன. இதனாலே இந்த க்ஷேத்திரத்துக்குப் பக்ஷி தீர்த்த மென வழங்கி வருகிறது. இந்த அன்னம் கொடுக்கும் பழக்கம் ஆதியில் செங்குந்த மர

பினர்களுக்கே உண்டென்பதற்கு, அநேக நூற்றுண்டுகளுக்கு முன் ஏற்பட்ட செங்குந்தர் சங்கப்பட்டயத்தில் "சம்பாதிக்கழுதளிக்கும் செங்குந்தம்" எனவும், வீர நாராயண விஜயத்தில் "கழுக்குன்றிற் கழுதூட்டும் கைக்கோளர்" என்றும் சொல்லியிருப்பதே போந்த சாக்ஷியாகும். தவிர, அந்த பூஷா - விதாதா என்னும் இரு கழுகுகள் 5000 - வருஷம் ஜீவித்து நமக்குத் தரிசனம் தருகிறதா ? என்னும் கேள்விக்குத் தக்க சாமாதானம் "பாவனுமாத்திரம் மனேசாந்தி" என்பதைக் கவனிக்க வேண்டும்.

## 13. மார்க்கண்டேயருக்காக சங்க உற்பத்தி.

மார்க்கண்டேய முனிவர் இந்த க்ஷேத்திரத்துக்கு விஜயம்செய்து, சங்க தீர்த்தத்தில் ஸ்நாநம் செய்து சிவலிங்கம் ஒன்று பிரதிஷ்டை செய்து, அதற்கு அபிஷேக பாத்திர மில்லாமல் மயங்கி நிற்க, இந்த தீர்த்தத்தில் சங்கம் பிறந்தது.

☞ **அந்த வழக்கத்தின்படி 12 - வருஷத்துக் கோர்தரம் சங்கம் பிறக்கிறது. 18—2—1909; 27—1—1919-ல் சங்கம் பிறந்தது. அதற்குமேல் இதுவரையும் உற்பத்தியாக வில்லை.**

## 14. முநிகணங்கள் தவம்.

முநிகணங்களுக்குப் பதஞ்சலி முநிவரால் உபதேசிக்கப்பெற்ற பாணினீயம் என்னும் வியாகரணத்துக்குரிய உண்மைப்பொருள் விளங்காது சந்தேகம் உண்டானபோது, இவ்வேத மலையில் தவம் செய்து, உண்மை தெளிந்து, ஆனந்த மடைந்தார்கள்.

## 15. சுரகுருச் சக்கிரவர்த்தி வேட்டை: ஸ்ரீவேதகிரி மஹிமையை பூஷா-விதாதா என்னும் கழுகு முநிவர் களால் அறிதல்.

மஹா பலிபுரத்தை அரசாண்ட சுரகுருச் சக்கிரவர்த்தி வேட்டையாட வேத மலைக்காட்டுக்கு வந்து, வேட்டை ஆடினன். அப்போது மாயீகன் என்னும் மாயப்பன்றியானது அரசனது பாணத்துக்கு அகப்படாது மறைந்தது. அந்த துஷ்டப் பன்றியைக்கொல்ல, அங்கு மிங்கும் அலைந்து, கடைசியில் ஓர் பாணம் விட்டான். அந்தப் பாணமானது மாயீகனென்னும் பன்றியைக் கொன்றதுடன், அருகேயிருந்த திலோர்த்தமை யாகிய பசுவையும் கொன்றது ; அரசன்

கோஹத்தி தோஷம் வந்து விட்டதென்று நடுங்கினன். பசுவாயிருந்த திலோர்த்தமை தேவ கன்னிகையாக உருவெடுத்து. "அரசனே! நான் திலோர்த்தமை; நந்திதேவரது தவத்தைக்கெடுக்க இந்திரனுல் ஏவப்பட்டு, நந்தி தேவரால் சாபம் பெற்றவள்; உன்னுலே சாப விமோசனமாக வேண்டுவது அந்நாள் ஆக்கினை; உனக்கு கோஹத்தி தோஷம் நேர்ந்து விட்டதென்று பயப்படவேண்டாம் என்றுசொல்லி, ஆகாய மார்க்கமாகச் சென்ருள். மாயீகனும் தான் அசுரனென்றும், மார்க்கண்டேயரது சாபத்தால், இவ்வாறு நேர்ந்ததென்றும் சொன்னன். இதுகாலையில் வேட்டைக்குக்கூடவந்த குஷ்டநாய் தாகவிடாய்க்கொண்டு, அம்மலைமீதிருந்த சுனைக்குள்சென்று. கால் தவறிச் சுனைக்குள் விழுந்தது. அந்நாய் குஷ்டரோகம் நீங்கிப் பொன்போல் பிரகாசித்தது. இவ்வாச்சரியத்தைக் கண்ட குஷ்டநோய் கொண்ட மந்திரி, தானும் அந்த சுனைக்குப் போய்ப்பார்த்தபோது, அச்சுனைநீர் புழுக்களால் நிரம்பியதுபோல் காணப்பட்டது. அதனுல் மந்திரி வாய்க்குள் நீர் போகாமல், ஸ்நானம் மாத்திரம் செய்தான். வாய் தவிர, சரீரமுழுதும் சொர்ணம்போல் பிரகாசித்தது, மந்திரி அரசனிடம் இந்த சங்கதியை விளம்ப, அன்று முதல் அம்மந்திரிக்கு முத்துமணி வெள்வாயன் என்கிற பெயர் வந்தது.

## 16. சுரகுரு அரசன் கழுகு முநிவர்கள் உபதேசத்தால் கோஹத்திதோஷம் நீங்க, சிவலிங்கப் பிரதிஷ்டை செய்தல்.

தனக்குக் கோஹத்தி தோஷம் இல்லையென்பதை உறுதிசெய்துகொண்டு, அரசன்மஹாபலிபுரம்திரும்பயத்தனிக்கையில்,அம்மலையில் தவஞ்செய்து கொண்டிருந்த பூஷா - விதாதா என்கிற இரு கழுகுகளும், சுரகுரு அரசனேடு சண்டையிட்டு, அவனது சேனைகளைச் சின்னபின்னப்படுத்திற்று, அரசன் ஆச்சரியமுற்று, அக்கழுகுகளை நமஸ்கரித்தான். கழுகுகள் அரசனுக்கு இந்த க்ஷேத்திர மான்மியம் - தீர்த்தமான்மிய முதலிய போதித்து, ஞான மார்க்கத்தையும் உபதேசித்தன. அதன்மீது சுரகுரு அரசன் அஞ்ஞானம் நீங்கி, கோஹத்தி தோஷம் நீங்குதற்குச் சிவலிங்கப் பிரதிஷ்டை செய்தான்.

---

" மூர்த்திதலந் தீர்த்தம் முறையால் தொடங்கிடங்கினர்க்கோர்
வார்த்தை சொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே."

— தாயுமானவர்.

☞ அந்த சிவலிங்கந்தான் தாழக்கோயிலில் பக்தவற்சலர் என்கிற நாமதேயத்தோடு விளங்குகிறது.

## 17. கைலேயங்கிரியிலுள்ள மூன்று சிகரங்களுள் ஒன்றை இங்கு அமர்த்தல்.

சிவ பெருமான் நந்திதேவரை அழைத்து, கைலேயங்கிரியிலுள்ள சிகரங்களுள் மூன்று சிகரங்களை, பூலோகத்தில் மூன்று இடங்களில் அமர்த்தி வருவாயாக என்று ஆக்யாபித்தார். அவ்வாறே, நந்தியெம்பெருமான், வடக்கே மல்லிகார்ச்சுனபுரத்தில் ஒன்றும், திருக்காளத்தியில் ஒன்றும், திருக்கழுக்குன்றத்தில் ஒன்றுமாக அமர்த்தினர். அதனால், இந்த க்ஷேத்திரத்துக்குத் தக்ஷிண கைலாசமென்றும் - சிவபுரம் என்றும் வழங்கி வருகிறது. ஆதலால், இந்த க்ஷேத்திரத்தில் வசித்தாலும், ஸ்ரீ வேதகிரியைப் பக்தி சிரத்தையோடு பிரதக்ஷிணம் செய்தாலும், இஷ்ட காம்யங்கள் சித்தியாவதோடு, மறுமையில் மோக்ஷபதவியையும் அடைவார்கள் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

## 18. தீர்த்த மஹத்வம்.

இந்த வேத மலேயைச் சுற்றிலும் அநேக தீர்த்தங்கள் உண்டாயினும், முக்கியம் திருமலேக்குக் கிழக்கு (மூவர் கோயிலுக்குப் பின்பக்கம்) இந்திரதீர்த்தம்; அக்கினி மூலேயில் சம்புதீர்த்தம் - உருத்திரகோடி தீர்த்தம்; தெற்கு வஸிஸ்டதீர்த்தம்; நிருதி மூலேயில் மெய்ஞ்ஞான தீர்த்தம்-அகஸ்திய தீர்த்தம் - மார்க்கண்டேய தீர்த்தம் - விஸ்வாமித்ர தீர்த்தம்; மேற்கு நந்திதீர்த்தம்-வருண தீர்த்தம்; வடமேற்கில் அகலிகை தீர்த்தம்; வேதகிரியின் மேல் கழுகு முநிவர்கள் மூக்கினல் கீறியது சம்பாதி தீர்த்தம்.

☞ இந்த திருக்கழுக்குன்ற மான்மியத்தை விபரமாக அறிய விரும்புவோர், திருக்கழுக்குன்றம் பண்டிட் S. R. நமசிவாய ராஜ யோகியாரால் பிரசுரிக்கப்பெற்ற, இரண்டு ரூபா விலேயுள்ள புத்தகம் வாங்கி வாசித்தால், சகல வித இரகஸ்யங்களையும் அறியலாம்.

## 19. சங்க தீர்த்த வைபவம்.

சூதர் சொல்லுகிறார்:— சௌனகாதி முநி ஸிரேஸ்டர்களே! திருக்கழுக்குன்றம் என்னும் உருத்திரகோடி மான்மியத்தை ஒருவாறு சுருக்கிக் கூறினேன். இப்போது சங்க தீர்த்த மான்மியத்தைப்பற்றிச்சிறிது கூறுகின்றேன்; கவனமாய்க் கேளுங்கள்.

☞ சங்கதீர்த்தம் கீழ் சந்நிதி வீதி கோடியில் சுமார் 1000-கஜம் விஸ்தீர்ண முள்ளது. இந்த தீர்த்தத்துக்கு நான்கு கட்டங்கள் (Ghats) உண்டு. இதன் கீழண்டை கரைக்கு ஹநுமத் கட்டம் (Hanuman Ghat) என்றும், மேலக்கரைக்கு மார்க்கண்டேய கட்டம் (Markandaya Ghat) என்றும், தென்னண்டை கரைக்கு உருத்திர கோடி கட்டம் (Ruthrakodi Ghat) என்றும், வடவண்டை கரைக்கு ஸ்ரீ வேதகிரி கட்டம் என்றும் பெயர் வழங்கி வருகிறது. இதற்குக் காரணம் கீழண்டைகரையில், ஹநுமான் கோயிலும், மேலண்டை கரையில், தீர்த்தேஸ்வரர் அல்லது மார்க்கண்டேயர் கோயிலும், தென்னண்டை கரை வாயு மூலையில், உருத்திரகோடீஸ்வரர் கோயிலும், வடவண்டை கரையில் ஸ்ரீ வேதகிரி மலையும் இருக்கிறது.

சுத்தமான ஊற்று ஜலம் நிரம்பியது. வேத மலையிலுள்ள சத்துள்ள சித்து மூலிகைகளில் ஊறிய ஜல வருவாயுள்ளது. தாமர சத்துடையது. 12-வருஷத்துக் கோர்தரம் சங்கமொன் றீன்றளிக்கும் பெருமையுடையது. சர்வ ஜனங்களது கர்ம ரோகங்களை நீக்க வல்லது. இந்த தீர்த்தத்தின் அரிய பெரிய மஹிமைகளை ஆதிசேஷனும், அளவிட முடியாதென்றால், முனிவர்களே! யான் என்ன சொல்லப் போகின்றேன்?

பூவுலகத்திலே தீர்த்த புஷ்கரம் என்கிற விசேஷ புண்யகாலம் சில தீர்த்தங்களில் நடப்பதுண்டு. அதன் விபரத்தைமுதலில் சொல்லி விட்டு, சங்க தீர்த்த புஷ்கரத்தைப் பற்றிப் பின்னர் சொல்லுகிறேன்.

நவக்கிரகங்களுக்குள் முதன்மை பெற்ற சுபக்கிரகமாகிய குருவினுடைய சாரத்தை அநுஷ்டித்து, தீர்த்த புஷ்கரம் உலகில் நடைபெறுகிறது. கும்ப ராசியில் குரு பிரவேசிக்கும்போது, வட இந்தியாவில் அரித்துவாரம் - பிரயாகை இவ்விரண்டு இடங்களிலும், கடகத்தில் குரு பிரவேசிக்கும்போது, (Nasik) நாசிக் என்னும் தேயத்திலும், சிம்மத்தில் குரு பிரவேசிக்கும்போது கோதாவரி தீரம் - உஜ்ஜீயின் (Ujjain) தேசத்திலும், தென் இந்தியாவில் கும்பகோணம் மஹா மக (மாமாங்கம்) குளத்திலும், கன்னியில் குரு பிரவேசிக்கும்போது, கிருஷ்ணநதி தீரம் - பெஜவாடா விலும், திருக்கழுக்குன்றம் என்னும் உருத்திரகோடி க்ஷேத்திரம் சங்க தீர்த்தத்திலும் தீர்த்த புஷ்கர மஹா புண்ணிய காலம் நடக்கிறது. இக்காலத்தில் பக்தகோடிகள் லக்ஷக்கணக்காகக் கூடி, அந்தத் தீர்த்தத்தில் ஸ்நாநஞ்செய்து, நித்திய கருமாநுஷ்டானங்கள் முடித்து, பிதுர் சிரார்த்தம்-கோதான முதலிய

தானங்கள் - சிவார்ச்சனை - அன்ன விரயம் முதலிய சத் கருமங்கள் செய்தால், இம்மையில் புத்திர பவுத்திர களத்திராதிகள் சூழ, சகல சம்பத்தோடு வாழ்வதோடு, மறுமயில் மோக்ஷ பதவியையும் அடைவார்கள்.

முனிவர்களே! இத்தகைய தீர்த்த புஷ்பகர மஹா புண்யகாலம் சங்க தீர்த்தத்துக்கும் உண்டு.

ஸ்லோகம்.

" கங்காத்யஸ் ஸரிதஸ் ஸ்வபுண்ய விபவா தன்யோன்ய மாற்
சரியஹ:, பத்யௌ சானுனயே பரிதேன ஸஹித: கோடீஸ்வர
ஸ்யாக்ஞய, ஸாமான்ய ஹிதிதாஸ் ஸாநிற்சிதத் த்யஹ:
ஸ்ரீஸங்க தீர்த்தா த்வயம் கன்யாரியே நிகமாசலே ஸமனுத்
ஸ்நாநாத் வாயவு நிர்விர்திம்."

கங்கை-யமுனை - ஸரஸ்வதி - வைகாணி - கௌதமை - மலப்பிரதரணி - துங்கபத்ரை - நர்மதா - கம்பை - பம்பை - கோமுகை - பொன்புகரி - தென்குமரி-சிவகங்கை-கண்டகி - வேத்ரவதி - பிராமி - தேவகை - பிநாகி - பாலை - பொருனை என்று வழங்கும் தாம்பிரவர்ணி - ஸேரவதி - சிந்து-ஸோமி - அளகை - நந்தினி - மந்தாத்ரி பெண்ணை - அம்பை - இந்த்ரபுத்ரி - காவேரி - குத்ரை - சரயு - வைகை-மணிமுத்தா முதலிய மூன்றரைக் கோடி நதிகளும், தங்கள் நாயகராய் விளங்கும் சமுத்திர அரசனிடம் பூவு மணமும் போல சமரசமாய் இன்ப சுகம் பொருந்தி வாழ்ந்து வரும் சமயத்தில்,

ஓர் நாள், அந்நதிகள் ஒவ்வொன்றும் தான் தான் மஹிமையுடையதென்று புகழ்ந்து கொண்டாடி வந்தன. அதனால், ஒருவருக்கொருவர் மாற்சர்யப்பட்டு, ஒருவரோடொருவர் சண்டையிட்டு வாதாடிப் போராடி நின்றார்கள். இதைக் கண்ணுற்ற சமுத்திர அரசன் சமாதானம் சொல்லியும் கேளாமல், மேன்மேலும் போராட்டம் அதிகப்பட்டது.

அதனால், சமுத்திர அரசன் கவலைக் கடலுள் மூழ்கி, அந்நதி தேவிகளை அழைத்துக்கொண்டு, கோதாவரி தீரத்திலுள்ள கோடீஸ்வரர் ஆலயம் சென்று, அங்கு திருக்கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் சுரேஸ்வரர் என்னும் திருநாமம் பெற்ற சிவபெருமானை வணங்கித்துதித்து, தன் குறைகளை விண்ணப்பித்தான். பக்த

பரா தீனராகிய சுரேஸ்வரப்பெருமான், அவர்களிடம் பெருங்கருணை கொண்டு, அப்பா! வருணா! நதிதேவிகளா! நீங்கள் இங்கு வந்த காலம் மிக்கபுண்ணிய தினமாகும். சிம்ம ராசியில் குரு பகவான் பிர வேசிக்குங்காலம், இந்த நதி தீரத்துக்கு விசேஷ மஹிமை உண்டு. இந்தத்தீர்த்தத்தில் நீங்கள் ஸ்நாநம் செய்யுங்கள். உங்கள் பொறு மைக் குணம் நீங்கும் என்று ஆசிர்வதித்தார்.

அவ்வாறே, சமுத்திர அரசனும் நதி தேவிகளும் அத்தீர்த்தத்தில் ஸ்நாநம் செய்து, எம்பெருமானைத் தியானித்து, ஒரு வருஷ காலம் அங்கு தங்கியிருந்தார்கள். ஒருவருட காலம் கழிந்ததும், கோடீஸ் வரப் பெருமான், சமுத்திர அரசனையும் நதி தேவிகளையும் அழைத்து, நீங்கள் யாவரும் இன்று திருக்கழுக்குன்றம் என்று வழங்கும் உருத் திரகோடி க்ஷேத்திரம் சென்று, அங்கு இந்திராதி தேவர்களால் புகழப் பெற்ற சங்க தீர்த்தத்தில் ஸ்நானம் செய்யும் பக்ஷத்தில், உங்களது பொறுமைக் குணம் நீங்கி, ஒற்றுமையாய் வாழ்வீர்க ளென்று ஆக்யாபித்தார். அவ்வாறே, சமுத்திர அரசன் மூன்றரைக் கோடி நதி தேவிகளோடும் உருத்திரகோடி க்ஷேத்திரம் வந்து, சங்க தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து எழுந்தவுடனே, தங்களுக்கு அது காறும் நிலைத்திருந்த அகங்காரமும் - பொறுமையும் இருந்தவிடம் தெரியாமல் மறைந்து நிற்பதைக் கண்டு, அவர்கள் ஆச்சரியமுற்று, ஸ்ரீ:வேதகிரியை வலம் வந்து, எம்பெருமானைத் தோத்திரித்து ஆநந்த பரவசமாய் நின்றார்கள்.

தவ சிரேஷ்டர்களே! விருத்தாசுரனைக் கொல்வதற்கு இந்திர னுக்கு தந்திரம் சொல்லிக் கொடுத்த மஹாவிஷ்ணுவின் சாபம் தீர்த் தது இந்த சங்க தீர்த்தமே. சம்புலிங்கத்தின் சாபம் விமோசனமான தும், யக்ஷனுடைய சாபம் விமோசனமானதும் இந்த சங்க தீர்த்த ஸ்நாநமேயாகும் என்று சூதமா முநிவர் சவுனகாதி முநிவர்களுக்கு உபதேசித்து, சிவத் தியானத்தில் அமர்ந்தார். ஓம் சுப மங்களம்.

## 20 ஸ்ரீவேதமலையைப் பிரதக்ஷிணம் செய்யும் விதி.

கிரிப்பிரதக்ஷிணம்செய்ய விரும்புவோர், அதிகாலை விடிய 4-மணி சுமாருக்கு எழுந்து, நித்தியக்கடன் முடித்து, சங்க தீர்த்தத்தில் ஸ்நா நம்செய்து; உலர்ந்த வஸ்திரம் உடுத்தி, தத்தம் மதாசாரக் கொள்கை யின்படி, விபூதி ருத்திராக்ஷம் - திருமண்காப்பு துளஸிமாலை அணி ந்து, தத்தம் மதாசாரக்கொள்கையின்படி கருமாநுஷ்டானங்களை

முடித்துக்கொண்டு, தம்மிஷ்ட தெய்வத்தைத் தியானித்து, அக்குளக் கரையில் எழுந்தருளியிருக்கும் இரட்டைப்பிள்ளையார் என்று வழங் கும் சண்முக விநாயகரைத்தரிசித்து, அங்கிருந்து கிராம தேவதை செல்லியம்மன் - ஒசூர் அம்மனைப் பிரதக்ஷிண நமஸ்காரம் செய்து, சொக்கப்பிள்ளையாரை நமஸ்கரித்து, அடிவாரம் வந்து, அஸ்வத்தம் பிரதக்ஷிணம்செய்து (☞ காலை 11-மணிக்குமேல் பிரதக்ஷிணம் கூடாது) சிந்தாத்ரி விநாயகரைப் பிரதக்ஷிண நமஸ்காரத்தோடு தரி சித்து, அருகேயுள்ள வீரபத்திரக்கடவுளைப்பிரதக்ஷிணம்செய்து, அங் கிருந்து மிருதுவாக நடந்து, மலைமருந்து எடுக்கும் திருவடிக்கோயி லிடமாக வந்து, அங்கு மஞ்சள் புஷ்பம் புஷ்பிக்கும் வேப்பமரத்தடி யில் திருக்கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் * நாகலிங்கேஸ்வர ரைப் பிரதக்ஷிண நமஸ்காரம்செய்து, அங்குள்ள மலை மருந்து எடு த்து உபயோகித்து, அங்கு ஐந்து கோபுரங்கள், திருமலைக்கோபுரம் ஒருங்குகாணப்படுவதைத் தரிசித்துச் சிறிது நேரம் ஆயாசம் தீர அமர்ந்திருக்கலாம். இங்குதான் சஞ்சிவிக்காற்று வீசுமிடமென்று சொல்வார்கள்.

அங்கிருந்து திருவடிக்கோயிலைபும், கோடி விநாயகப்பெருமானை யும் தரிசித்து, மிருதுவாக நடந்து, திருமலைச் சொக்க நாயகி அம்மனை யும், அதற்கு எதிரிலுள்ள சப்த கன்னிகளையும் பிரதக்ஷிண நமஸ் காரம் செய்து, அங்கிருந்து சிறிது தூரஞ் சென்றால், சொக்காம்மா என்று உரத்துக் கூப்பிட்டால் "ஓம்" என்று சப்தம் கேட்டு மிடத் துள்ள நந்தி தேவரை நமஸ்கரித்து, அங்கிருந்து சென்றால், கந்தப் பெருமான் திருக்கோயில் கொண்டெழுந் தருளியிருக்கும் திருப்

---

* வக்குவ மகரிஷியின் பரம்பரையினரும் ஸ்ரீ அபிநவ தர்மசிவா சாரிய சுவாமிகளின் சிஷ்ய கோடிகளும், வணிக வைசிய குலபேரி செட்டிமார் ஆயிரவர்களுள் ஒருவராகிய, சென்னை மானுதி மகரிஷி கோத்ரம், கொளத்தூர் சோமு செட்டியார் ஜேஷ்ட புத்திரர் தியாக ராஜ செட்டியார் அவர்களின் பாரியை ஜெகதாம்பாள் என்கிற வடு வாம்பிகை அம்மையார், இவ்விருவர்களால் யாதொரு பலத்தையும் எதிர்பாராமல் பிரதிஷ்டை செய்யப்பெற்று, பக்ஷி தீர்த்த வாசியும் ஆகம நவக்கிரக ஸாந்தி - ஷஷ்டி அப்த முதலிய சாந்தி, ஸாக்த்ய கலா வல்லபர் ஜ்வாலாஸாந்த குருமூர்த்தி ஸஷ்டி பூர்த்தி ஸ்ரீலஸ்ரீ. தி. அ. சுப்பராய தேசிகர் அவர்களால் சாஸ்திர விதிப்படி மஹா கும்பா பிஷேகம் 1931 - வருடம் செய்யப்பெற்றது.

போரூரைத் திக்கு நோக்கி வணங்கி, அங்கிருந்து சென்றால், திருமலைக் கோபுரம் தரிசனமாகும். பின்னர் எல்லையம்மனை தரிசித்து வந்தால், சைவ சமயாசாரியர்கள் நால்வர் கோயிலைப் பிரதக்ஷிண நமஸ்காரம் செய்தல் வேண்டும்.

பின்னர் அடிவாரம்வந்து சேரலாம். (இந்த பிரதக்ஷிண சாலை 2¼-மயில்) திருமலையாண்டவனைத் தரிசித்து, தாழக்கோயில் வந்து, ஸ்ரீபக்தவத்சலப் பெருமானையும், ஸ்ரீ ஆறுமுகப்பெருமானையும், ஸ்ரீ திரிபுரசுந்தரி அம்பாளையும் தரிசிக்கவேண்டும். அம்பாளை 5-7-9-21 51-108. பிரதக்ஷிணங்கள் அவரவர் சக்திக்கியன்றவரை பிரதக்ஷிணம் செய்வது உத்தமம். சக்தியும் பிரார்த்தனையு மிருந்தால் அங்கப் பிரதக்ஷிணம்-அடிமேலடிப் பிரதக்ஷிணம் செய்யலாம்; பொருளிருந்தால் ஆதி சைவர்களைக்கொண்டு, அஷ்டோத்தர சதநாமங்களாலும், சகஸ்ர நாமங்களாலும் அருச்சனை செய்விக்கலாம். இல்லாவிடில், கற்பூராத்தி செய்து, வீடுவந்து சுத்தமான ஆகாரம் உண்டு, கடவுள் பக்தியை உண்டாக்கும் சாஸ்திரங்களைப்படித்தல் வேண்டும். பகல் உறக்கம்கூடாது; இவ்வாறு மாலையிலும் பிரதக்ஷிணம் செய்யலாம் - சரீரபலம் குறைந்தவர்களாயிருந்தால், கிரிப்பிரதக்ஷிணம் காலையில் மாத்திரம் செய்து, மாலையில் அம்பாள் பிரதக்ஷிணம் செய்யலாம்.

ஒரு மண்டலம் 45-நாள்; அரை மண்டலம் 23-நாள்; கால்மண்டலம் 12-நாள்; இவ்விதம் அவரவர் பிரார்த்தனையின்படி சவுகரியத்தை உத்தேசித்துப் பிரதக்ஷிணம் செய்து, பூர்த்தியான மறுநாள் திருமலையேறி, ஸ்ரீ வேதகிரிப்பெருமானுக்கு தங்கள் சவுகரியப்படி அபிஷேக அலங்கார ஆராதனைகள் செய்து, அன்று மாலை தாழக்கோயிலில் ஸ்ரீ திரிபுர சுந்தரி அம்பாளுக்கு அபிஷேக அலங்காரம் - ஆராதனை முடித்தல் வேண்டும். சாதுக்களுக்குச் சவுகரியப்படி அன்னதானம் செய்யலாம். பிரார்த்தனை முடிந்ததும், நல்ல நாள் பார்த்து, தத்தம் ஊருக்குச்செல்லலாம். எல்லாம் வல்ல இறைவன் அநுக்கிரகம் புரிவார்.

## முக்கிய கவனிப்பு.

☞ பிரதக்ஷிண காலங்களில் ஈர வஸ்திரம் உடுத்தப்படாது. தலைமயிரை விரித்துச் செல்லப்படாது. குடும்ப காரியத்தைப் பற்றியும் வீண் வியவகாரங்களைப்பற்றியும் போகப்படாது. மாதவிடாயாகும் ஸ்திரீகள் மாதவிடாயான 5-ம் நாள் முதல் 15-நாள் வரையும் பிரதக்ஷிணம் செய்யலாம். மறுதூரமாகிற வரையும் பிரதக்ஷிணம் செய்யப்படாது. மருந்து சாப்பிடுவோர் பிரதக்ஷிணம் செய்யச் சரீரம் இடங்கொடுத்தால், பிரதக்ஷிணம் செய்யலாம். வெந்நீரில் ஸ்நாநம்செய்து பிரதக்ஷிணம் செய்வதில் குற்றமொன்று மில்லை.

ஓம் சுபமங்களம்.

திருக்கழுக்குன்றம் ஸ்தலபுராண வசனச்சுருக்கம் சம்பூரணம்.

"மாணிக்யவீணா முபலாலயந்தீம் - மதாலசாம் மஞ்சுள வாக் விலாசாம், மஹேந்த்ர நீலத்யுதிகோமளாங்கீம், மாதங்க கன்யாம் மனஸாஸ்ஸ்மராமீ:"

"சதுர்ப்புஜே சந்த்ரகளாவதம்ஸே, குசோன்னதே குங்குமராகசோணே, புண்ட்ரேக்ஷுபாசாங்குச புஷ்பபாண ஹஸ்தே, நமஸ்தே ஜகதேகமாதஃ"



"மாதா மரகதஸ்யாமா, மாதங்கி மதுசாலினி, குர்யாத் கடாக்ஷம் கல்யாணீ - கதம்பவனவாஸினீ - ஜயமாதங்க தனயே ஜய நீலோத்பல த்யுதே ஜய ஸங்கீத ரஸிகே, ஜய லீலா சுகப்ரியே."

திருக்கழுக்குன்றம்.

## பெண்ணினல்லாள் அம்மன்

என்னும்

## ஸ்ரீ திரிபுர சுந்தரி அம்பாள்.

### ஸ்ரீ இராஜராஜேஸ்வரி
## திரிபுரசுந்திரி அம்பாள் அஷ்டகம்.

1 அம்பா - சாம்பவி - சந்த்ரமௌலி - அம
லா பர்ணு - உமா - பார்வதி - காளீ - ஐமா
வதி - சிவா - த்ரிநயனீ - காத்யாயனீ -
பைரவீ - ஸாவித்ரி - நவ யவ்வனு -
ஸுபகரி - ஸாம்ராஜ்ய லக்ஷ்மீப்ரத: -
சித்ரூபி - பரதேவதா - பகவதி -
ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரீ.

2 அம்பா - மோஹினி தேவதா - த்ரிபுவனி -
ஆநந்த சந்தாயனி - வாணி - பல்
லவ பாணி - வேணு - முரளீகானப்
பிரியா லோலினீ - கல்யாணீ - உடு
ராஜ பிம்ப வதனு - தூம்ராக்ஷ சம்
ஹாரணீ - சித்ரூபி - பரதேவதா - பகவதி -
ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரீ.

3 அம்பா - நூபுர ரத்நகங்கண தரீ -
கேயூர ஹநாநாவளி - ஜாதீ சண்பக
நைஜயந் திலகரி - க்ரைவேய
வைராஜதாம் - வீணுவேணு விநோத
மண்டித கரா - வீராசனு - சம்ஸ்திதாம்
சித்ரூபீ - பரதேவதா - பகவதீ -
ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரீ.

4 அம்பா - ரௌத்ரீணி - பத்ரகாளி -
பஹுளா - ஜ்வாலாமுஹி - வைஷ்ட்ணவீ -
பிர்ம்ஹாணீ - த்ரிபுராந்தகி - ஸுர
நுதா - தேதீப்ய மானோஜ்வலா -
ஸாமுண்டாஸ்ரித ரக்ஷ போஷ
ஜனனி - தாக்ஷாயணி -. வல்லவீ -
சித்ரூபி - பரதேவதா - பகவதி - ஸ்ரீ ராஜராஜேஸ்வரி.

5 அம்பா - சூலதனுரகு ஸாங் - குஸதரீ -
அர்த்தேந்து பிம்பாதரீ - வாராகி -
மது கைடபப் பிரசமணீ - வாணி
ரமா ஸேவிதே - மல்லாத்யா: ஸுர
மூக தைத்ய தமனீ - மஹேஸ்வரீ -
அம்பிகே - சித்ரூபீ - பரதேவதா - பகவதீ -
ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரீ.

6 அம்பா - சிருஷ்டி விதாச பாலனகரீ -
ஆர்யாவி ஸம்ஸோபிதா -
காயத்ரீ பிரணவாக்ஷரா ம்ருதரஸ
பூர்ணனு சந்தீக்ருதா -
ஓங்காரீ - விநுதிர ஸுதார்ஜ்ஜித பதா -
உத்தண்ட தைத்யாபஹா - சித்ரூபீ -
பரதேவதா - பகவதீ - ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரீ.

7 அம்பா - சாஸ்வத ஆகமாதி வினுதா -
ஆர்யா மஹாதேவதா -
யரப்ர்மமாதி பிபீலிகாந்த ஜெனனீ -
யாவை ஜெகன் மோஹினி -
யாபஞ்ச பிரணவாதிரே ப ஜெனனீ -
யாசித் கலாமாலினி - சித்ரூபீ -
பரதேவதா - பகவதீ - ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரீ.

8 அம்பா - பாலித பக்த ராஜரனி
ஸம் - அம்பாஷ்ட்டகம் ஸ்யபடேது -
அம்பா லோக கடாக்ஷ வீக்ஷ லலிதா -
ஐஸ்வர்ய மவ்யாஹதா - அம்பா -
பாவன மந்த்ர ராஜ படனு -
தந்தீஸ மோக்ஷப்பிரதா சித்ரூபீ
பரதேவதா - பகவதீ - ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரீ.

அஷ்டகம் ஸம்பூர்ணம்.

## பட்டினத்தடிகள்.

காடோசெடியோகடற்புரமோகனமேமிகுந்த
நாடோநகரோநகர்நடுவோநலமேமிகுந்த
வீடோபுறந்திண்ணையோதமியேனுடல்வீழுமிடம்
நீடோய்கழுக்குன்றிலீசாவுயிர்த்துணைநின்பதமே.

திருச்சிற்றம்பலம்

## திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகள் அருளிச்செய்த தேவாரப்பதிகங்கள்.

(பண் குறிஞ்சி.)

திருச்சிற்றம்பலம்.

தோடுடையா னொருகாதிற் றூயகுழை தாழ
வேடுடையான் றலைகலனாகவிரந்துண்ணு
நாடுடையானள்ளிருளேம நடமாடுங்
காடுடையான் காதல்செய் கோயில் கழுக்குன்றே. 1

கேணவல்லான் கேழல்வெண் கொம்புகுறளாமை
பூணவல்லான் புரிசடைமேலோர் புனல்கொன்றை
பேணவல்லான் பெண்மகடன்னை யொருபாகங்
காணவல்லான் காதல்செய்கோயில் கழுக்குன்றே. 2

தேனகத்தார் வண்டதுவுண்ட திகழ்கொன்றை
தானகத்தார் தண்மதிசூடித் தலைமேலோர்
வானகத்தார் வையகத்தார்க டொழுதேத்துங்
கானகத்தான் காதல்செய்கோயில் கழுக்குன்றே. 3

துணையல்செய்தான் றூயவண்டியாழ் செய்சுடர்கொன்றை
பிணையல்செய்தான் பெண்ணினல் லாளையொருபாக
மிணையல்செய்யா விலங்கெயின் மூன்றுமெரியுண்ணக்
கணையல்செய்தான் காதல்செய்கோயில் கழுக்குன்றே. 4

பையுடைய பாம்பொடுநீறு பயில்கின்ற
மெய்யுடையான் வெண்பிறை சூடிவிரிகொன்றை
மையுடைய மாமிடற்றண்ணன் மறிசேர்ந்த
கையுடையான் காதல்செய்கோயில் கழுக்குன்றே. 5

வெள்ளமெல்லாம் விரிசடைமேலோர் விரிகொன்றை
கொள்ளவல்லான் குரைகழலேத்துஞ் சிறுத்தொண்ட
ருள்ளமெல்லா முள்கிநின்றாங்கே யுடனாடுங்
கள்ளம்வல்லான் காதல்செய்கோயில் கழுக்குன்றே. 6-7

ஆதல்செய்தா னரக்கர்தங்கோனை யருவரையி
னோதல்செய்தா னொடிவரையின் கண்விரலூன்றிப்
பேர்தல்செய்தான் பெண்மகடன்னோ டொருபாகங்
காதல்செய்தான் காதல்செய்கோயில் கழுக்குன்றே. 8

இடந்தபெம் மானேனமதாயுமனமாயுந்
தொடர்ந்தபெம்மான் றூமதி சூடிவரையார்தம்
மடந்தைபெம்மான்வார்கழலோச்சிக்காலனைக்
கடந்தபெம்மான் காதல்செய்கோயில் கழுக்குன்றே. 9

தேயநின்றான் றிரிபுரங்கங்கை சடைமேலே
பாயநின்றான் பலர்புகழ்ந்தேத்த வுலகெல்லாஞ்
சாயநின்றான் வண்சமண்குண்டர் சாக்கியர்
காயநின்றான் காதல்செய்கோயில் கழுக்குன்றே. 10

கண்ணுத லான்காதல் செய்கோயில் கழுக்குன்றை
நண்ணியசீர் ஞானசம்பந்தன் றமிழ்மாலை
பண்ணியல்பாற் பாடிய பத்துமிவை வல்லார்
புண்ணியராய் விண்ணவரோடும் புகுவாரே. 11

திருச்சிற்றம்பலம்.

---

திருநாவுக்கரசுசுவாமிகள் அருளிச்செய்த

## தேவாரப்பதிகங்கள்.

திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்.

மூவிலைவேற்கையானை மூர்த்திதன்னை முதுபிணக்காடுடையானை முதலானானை, யாவினிலைந் துகந்தானை யமரர்கோனை யாலாலமுண்டுகந்த வையன்றன்னைப் பூவினின்மே னான்முகனு மாலும்போற்றப் புணர்வரிய பெருமானைப் புனிதன்றன்னைக், காவலனைக் கழுக்குன்றமமர்ந்தான்றன்னைக் கற்பகத்தைக் கண்ணாரக் கண்டே னானே. 1

பல்லோடு தலைசடைமே லுடையான்றன்னைப் பாய்புலித்தோலுடையானைப் பகவன்றன்னைச், சொல்லோடு பொருளனைத்து மானான்றன்னைச் சுடருருவிலென்பறாக் கோலத்தானை, யல்லாத காலனைமுன் னடர்த்தான் றன்னை யாலின்கீழிருந்தானை யமுதானானைக், கல்லாடை புனைந்தருளுங் காபாலியைக் கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேனானே. (2) [3-4-5-6-7-8-9-10]

திருச்சிற்றம்பலம்.

---

சுந்திரமூர்த்தி சுவாமிகள் அருளிச்செய்த

## தேவாரப்பதிகங்கள்.

பண்-நட்டபாஷை.

திருச்சிற்றம்பலம்.

கொன்றுசெய்தகொடுமையார்பலசொல்லவே
நின்றபாவம் வினைகடாம்பல நீங்கவே
சென்றுசென்றுதொழுமின்றேவர்பிரானிடங்
கன்றினோடுபிடிசூழ்தண்கழுக்குன்றமே. (1)

இரங்கிச்சென்று தொழுமினின் னிசைபாடவே
பிறங்குகொன்றைச் சடையனெங்கள் பிரானிட
நிறங்கள்செய்த மணிகணித்திலங் கொண்டிழி
கறங்குவெள்ளை யருவித்தண் கழுக்குன்றமே. 2

நீளநின்றுதொழுமினித்தலுநீதியா
லாளுநம்வினைகளல்கியழிந்திடத்
தோளுமெட்டுமுடையமாமணிச்சோதியான்
காளகண்டனுறையுந்தண்கழுக்குன்றமே. 3

வெளிறுதீரத்தொழுமின்வெண்பொடியாடியை
முளிறிலங்குமழுவாளன்முந்தியுறைவிடம்
பிளிறுதீரப்பெருங்கைப்பெய்மதமூன்றுடைக்
களிறினோடுபிடிசூழ்தண்கழுக்குன்றமே. 4

புலைகடீரத்தொழுமின்புன்சடைப்புண்ணிய
னிலைகொள்சூலப்படையனெந்தைபிரானிட
முலைகளுண்டுதழுக்குட்டியொடுமுசுக்
கலைகள்பாயும்புறவிற்றண்கழுக்குன்றமே. 5

மடமுடையவடியார்தம்மனத்தேயுற
விடமுடையமிடறன் விண்ணவர்மேலவன்
படமுடையவரவன்றான்பயிலும்மிடங்
கடமுடையபுறவிற்றண்கழுக்குன்றமே. 6

ஊனமில்லாவடியார்தம்மனத்தேயுற
ஞானமூர்த்திநட்டமாடிநவிலும்மிடந்
தேனும்வண்டும்மதுவுண்டின்னிசைபாடியே
கானமஞ்சையுறையுந்தண்கழுக்குன்றமே. 7

அந்தமில்லாவடியார் தம்மனத்தேயுற
வந்துநாளும்வணங்கிமாலொடுநான்முகன்
சிந்தைசெய்துமலர்கணித்தலுஞ்சேரவே
கந்தநாறும்புறவிற்றண்கழுக்குன்றமே. 8

பிழைகடீரத்தொழுமின்பின்சடைப்பிஞ்ஞகன்
குழைகொள்காதன்குழகன்றானுறையும்மிட
மழைகள்சாலகலித்துநீடுயர்டும்பவை
கழைகொன்முத்தஞ்சொரியுந்தண்கழுக்குன்றமே. 9

பல்லில்வெள்ளைத்தலையன்றான் பயிலும்மிடங்
கல்லில்வெள்ளையருவித்தண்கழுக்குன்றினை
மல்லின்மல்குதிரடோளூரண்வனப்பினாற்
சொல்லல்சொல்லிதொழுவாரைத்தொழுமின்களே. (10)

திருச்சிற்றம்பலம்.

---

## ஸ்ரீமாணிக்கவாசக சுவாமிகள் அருளிச்செய்த
## திருவாசகம் குருதரிசனம்.

திருச்சிற்றம்பலம்.

பிணக்கிலாதபெருந்துறைப்பெருமானுனாமங்கள்பேசுவார்க்
கிணக்கிலாததோரின்பமேவருந்துன்பமேதுடைத்தெம்பிரா
னுணக்கிலாததோர்வித்துமேல்விளையாமலென்வினையொத்தபின்
கணக்கிலாத்திருக்கோலநீவந்துகாட்டினாய்கழுக்குன்றிலே. 1

பிட்டுநேர்படமண்சுமந்தபெருந்துறைப்பெரும்பித்தனே
சட்டநேர்படவந்திலாதசழக்கனேனுனைச்சார்ந்திலேன்
சிட்டனேசிவலோகனேசிறுநாயினுங்கடையாயவெங்
கட்டனேனையுமாட்கொள்வான்வந்துகாட்டினாய்கழுக்குன்றிலே. 2

மலங்கினேன்கண்ணினீரைமாற்றிமலங்கெடுத்தபெருந்துறை
விலங்கினேன்வினைக்கேடனேனினிமேல்விளைவதறிந்திலே
னிலங்குகின்றநின்சேவடிகளிரண்டும்வைப்பிடமின்றியே
கலங்கினேன்கலங்காமலேவந்துகாட்டினாய்கழுக்குன்றிலே. 3

பூணொணாததோரன்புபூண்டுபொருந்திநாடொறும்போற்றவும்
நாணொணாததோர்நாணமெய்திநடுக்கடலுளழுந்திநான்
பேணொணாதபெருந்துறைப்பெருந்தோணிபற்றியுகைத்தலுங்
காணொணாத்திருக்கோலநீவந்துகாட்டினாய்கழுக்குன்றிலே. 4

கோலமேனிவராகமேகுணமாம்பெருந்துறைக்கொண்டலே
சீலமேதுமறிந்திலாதவென்சிந்தைவைத்தசிகாமணி
ஞாலமேகரியாகநானுனைநச்சிநச்சிடவந்திடுங்
காலமேயுனையோதநீவந்துகாட்டினாய்கழுக்குன்றிலே. 5

பேதமில்லதோர்கற்பளித்தபெருந்துறைப்பெருவெள்ளமே
யேதமேபலபேசநீயெனையேதிலார்முனமெய்செய்தாய்
சாதல்சாதல்பொல்லாமையற்றதனிச்சரண்சரணாமெனக்
காதலாலுனையோதநீவந்துகாட்டினாய்கழுக்குன்றிலே. 6

இயக்கிமாராறுபத்துநால்வரையெண்குணஞ்செய்தஈசனே
மயக்கமாயதோர்மும்மலப்பழவல்வினைக்குளழுந்தவுந்
துயக்கறுத்தெனையாண்டுகொண்டுநின்றாய்மலர்க்கழல்தந்தெனைக்
கயக்கவைத்தடியார்முனேவந்துகாட்டினாய்கழுக்குன்றிலே. 7

திருச்சிற்றம்பலம்.

## திருப்போரூர் ஸ்ரீ சிதம்பரசுவாமிகள் அருளிச்செய்த
## திருவிலிங்கப் பதிகம்.

(நேரிசை யாசிரிய விருத்தம்.)

அண்ட ரர கரவென ரிஷிகள் சிவ சிவவென அரவமுடல்நெற
நெறெனவும், அணிகங்கை சலசலென நெற்றிவிழி நிகநிகவென அவ

னி கிடு கிடுவெனவெண், அண்டமதி தளதளென வரியுரிச் சடசடென சொரூபவொளி பளபளெனவுந், துவளுமுய லகன்முதுகு மொளமொளெனத் தாளிற் றெடுத்தகிண் கிணியொலிப்பத், தெண்டனிடுமடியவர் சிலம்புகல கலவெனத் தேவதுந்துமி முழங்கத் திகழ் நந்தி மத்தள மடமடென மகிழ்விநொடு தேவர் பூ மழைகள் பொழியக், குண்டலந் தகதகென வரிபிரம ரிஷிமுனிவர் கொண்டாட நடனமாடுங், கொங்கை மத மங்கையொரு பங்கிலுறையுங் கழுக் குன்றின் மஹா லிங்கமே. 1

மயிலில்வரு ஷண்முகனை மேவியே சூரனிட வன்சிர மறுத்த லிங்கம், வந்து திரிதுந்திய வெலிக்குத் திரிலோகத்தை மனமகிழ வீய்ந்தலிங்கம், கயிலைமலை பதினான்கு லோகத்தை யாண்டிட கர்த்தவ்வியமான லிங்கம், கனகமகமேருகிரி வலமாக வந்திடுங் கதிர்மதி கண்ணனலிங்கம், துயிலு முயர் தவமுடைய ஞானவிழி காணவரு சொர்ப்பன மகாலிங்கம், சுரகுரு சக்ரவர்த்திக்கு வெண்குட்டந் தொலைத்திட்ட ஜோதிலிங்கம், குயிலிசை முழக்க மெனச் சங்கீத ரம்பையர்கள் கோடிசத கோடிசூழும், கொங்கைமத மங்கையொரு பங்கிலுறையுங் கழுக்குன்றின் மஹாலிங்கமே. 6

சித்தமுஞ் சம்பாதி தேவர்வல மாய்வந்து நின்றுதொழு காக்ஷி லிங்கம், நேசமா யஷ்டவசு யிடிசங்கு தோன்றியே பூஜிக்க நின்றமன சாக்ஷிலிங்கம், கற்றதமிழ் சுந்தரர்பாடிவரவேயன்று காணுதொளித்த லிங்கம், கண்டபின் செங்கலைப் பொன்னுக்கி யெறிகின்ற கடவுள் பொன் னிட்டலிங்கம், முற்றத்திலேவந்து தாசிதமிழைக்கேட்டு மோட்சங் கொடுத்த லிங்கம், முப்புரமெரித்திட்ட சிறியநகைபுரி கின்ற மூர்த்தியாம் வேதலிங்கம், குற்றமிகவே செய்த நாயேனை யடிமையாம் கொண்டவானந்தலிங்கம், கொங்கைமத மங்கையொரு பங்கிலுறையுங்கழுக் குன்றின் மஹாலிங்கமே. 11

திருக்கழுக்குன்றம் திருவிலிங்கப்பதிகம் முற்றிற்று.

---

திருக்கழுக்குன்றம்

## ஸ்ரீ வேதகிரீஸ்வரர்பேரில் மலைமருந்து பாடல்.

கட்டளைக் கலித்துறை.

1 செய்யகமலத்திருவாழ்வளிக்குந்தியங்குமனத்
தையமகற்றுமறிவேகொடுக்குமடர்ந்தபிணி
நையநறுக்குநமனையுருக்குநளிகடல்சூழ்
வையந்துதித்திடும் வேதகிரீசர் மலைமருந்தே.

2 சூனியம்போக்கும்பகைநீக்கும்வெய்ய சுரந்தவிர்க்கும்
ஞானமுண்டாக்குமதன்போற்றிகழ்வுநயந்துதவும்

யீனந்தவிர்க்கும்பசாசுகள்பூதத்திடாகற்றும்
வானவர்போற்றிடும் வேதகிரீசர் மலைமருந்தே

3 சிர்கண்டகாமாலைத்தலைவலிபல்வலிசிதசுரம்
மூர்க்கம்செயும்விஷம்பீனிசங்காசமுதற்பலநோய்
தீர்க்குஞ்சமன்வலிநீக்கிமண்மேல்வச்ரதேகந்தந்தே
மார்க்கண்டன்போல்வைக்கும் வேதகிரீசர் மலைமருந்தே.

4 நிரந்தரஞ்செல்வந்தருமொருக்காலுநிலைதளரா
புரந்தரன்மாலயன்விண்ணோரியற்றியபூசனைக்கு
உரந்தருங்கல்விதருஞ்சிவஞானத்துண்மைதரும்
வரந்தந்தருள்செயும் வேதகிரீசர் மலைமருந்தே.

5 நருத்தைந்தெழுத்துன்னிகாலசையாமல்கண்மூக்குநுனி
பொருத்திக்கருப்பைமடமாதர்கோள்மறைபூதரத்தை
யுருத்தியுடனமர்தீவினைபோக்கி யுறும்பிறவி
வருத்தம்தணித்திடும் வேதகிரீசர் மலைமருந்தே.

6 ஆதவுந்தீர்த்திடுங்கயிலையிலுளும்மருந்நதி
சிதப்புனத்தடத்துள்மூழ்கிநித்தஞ்செயல்முடித்தே
ஓதியெழுத்தைந்தையுமடிவாரத்திலுய்த்துரைப்ப
வாதையறுத்திடும் வேதகிரீசர் மலைமருந்தே.

7 விடந்தீர்க்கும்பல்வினைபோக்கும்வலியவிறல்கொடுக்கும்
கொடுஞ்சூலைவாதகுன்மங்கள்நீக்கும் சூலைய்கற்றும்
மடஞ்சேருமின்னார்கள்வசியமுண்டாக்கும்வரமளிக்குந்
தடஞ்சேர்புயத்தினன் வேதகிரீசர் மலைமருந்தே.

8 பஞ்சமாபாதகந்தீர்க்குமெஞ்ஞான்றுபரிவுடனே
தஞ்சமென்றேநம்பியுண்போர்க்கமுதசஞ்சீவிபொல்லா
வெஞ்சினத்தோர்செயுங்குத்திரஞ்சாய்க்கும்விறல்கொடுக்கும்
வஞ்சகமகற்றிடும் வேதகிரீசர் மலைமருந்தே.

9 கொல்வினைகுட்டங்கொலைநோய்குன்மம்கொலைகொடிய
பல்வினைத்தீயவிடப்பாண்டுநோய்பஞ்சபாதகமும்
தொல்வினையென்றுந்தொலையாவினையுந்தொலைத்தடியேன்
வல்வினைதீர்த்திடும் வேதகிரீசர் மலைமருந்தே.

10 மூலவியாதிபொல்லாப்பாண்டுரோகமுருமூர்ச்சைவலி
சாலவபாதிக்ஷயரோகமியாவையும்தானடக்கும்
பாலசவுந்தரியோர்பாகன்மூவர்சொல்பாடல்கொள்ளும்
மாலயன்தேடிடும் வேதகிரீசர் மலைமருந்தே.

11 நந்தித்தடஞ்சங்குதீர்த்தம்சம்பாதிமெஞ்ஞானநதி
வந்திக்கில்வாழவருள்வனசொக்கவாரறைநீள்

அந்திப்பிறையணிவேதகிரீசர்மலைமருந்தைச்
சிந்திக்கில்வினைநீங்கிமெஞ்ஞானமும்சேர்த்திடுமே.

12 பள்ளிகொள்மாலயனும்வேதனும்தேடிப்பணிந்துவரும்
தெள்ளியபூங்குழல்பெண்ணினல்லாளொடுசேர்ந்துநிதம்
வள்ளலெனத்தரும் வேதகிரீசர் மலைமருந்தை
அள்ளியுண்டால்நமன்தெண்டனிட்டோடியலறுவனே.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீ அருணகிரிநாதர் திருவாய் மலர்ந்தருளிய

## திருப்புகழ்

ஓலமிட்ட சுரும்பு தனு தனுவென
வேசிரத்தில் விழுங்கை பளீர் பளீரென
வோசை பெற்றசிலம்பு கலீர் கலீரென — விரகலீலை
ஓர்மிடற்றி லெழும்புள் குகூ குகூவென
வேர்வை மெத்த வெழுந்து சலா சலாவென
ரோமகுச்சு நிறைந்து சிலீர் சிலீரென — அமுதமாரன்
ஆலயத்து ளிருந்து குபீர் குபீரென
வேகுதிக்க வுடம்பு விரீர் விரீரென
ஆமுத்த மணிந்து அளா அளாவென — மருவுமாதர்
ஆசையிற்கை கலந்து சுமா சுமாபவ
சாகரத்தி லழுந்தி எழா எழாதுளம்
ஆறெழுத்தை நினைந்து குகா குகாவென — வகைவராதோ
மாலையிட்ட சிரங்கள் செவேல் செவேலென
வேலெழுச்சி தரும்பல் வெளேல் வெளேலென
வாகைபெற்ற புயங்கள் கறேல் கறேலென — எதிர்கொள்சூரன்
மார்புமொக்க நெரிந்து கரீல் கரீலென
பேய்குளக்க நிணங்கள் குழூ குழூவென
வாய்புதைத்து விழுந்து ஐயோ ஐயோவென — உதரமாறும்
வேலைவற்றி வறண்டு சுறீல் சுறீலென
மாலைவெற்பு மிடிந்து திடீல் திடீலென
மேன்மைபெற்ற ஜனங்கள் ஐயா ஐயாவென — விசைகள்கூற
வேலெடுத்து நடந்த திவா கராசல
வேடுவப்பெண் மணந்த புயா சலாதமிழ்
வேதவெற்பி லமர்ந்த க்ருபாகரா சிவ — குமரவேளே

---

5. சிவராஜயோகி பாக்கட் டாக்டர் 245 - அற்புத சுலப முறைகள்; தாங்களே வயித்தியர் உதவியைத் தேடாமலே செய்து கொள்ளக் கூடியவை. தபாற் கூலியுட்பட விலை அணா. 0—8—0

6. நவக்கிரக ஸ்தோத்ரம் சாந்தி-வேதருக்குகள்-ஸ்தோத்திரங்கள், அஷ்டோத்தர சகஸ்ரநாம அருச்சனை-சக்கரங்கள் படங்களுடன் ஸ்ரீ ஸ. தி. அ. சுப்பராய தேசிகர் தமிழில் எழுதியது; பெரிய புத்தகம் அணா 0—8—0

லலிதா ஸகஸ்ர நாமம் :—

7. ஸ்ரீராஜராஜேஸ்வரி அஷ்டோத்தர சதநாமங்கள் - திரிஸதி - சகஸ்ரநாமங்கள் - பலவகையான தேவி ஸ்தோத்திரங்கள் படம் ஸ்ரீசக்கரத்துடன் 0—8—0

☞ இவ்விரண்டு ஸ்ரீ ஸ. தி. அ. சுப்பராய தேசிகர் எழுதியவை புத்தகங்களும் கிரந்த உச்சரிப்புக்கிணங்க தமிழில் எழுதப்பெற்றதாகும். ஒவ்வொன்றுக்கும் தபாற் கூலி அணா 0—2—0

8. பூஜிப்பதற்குரிய பக்ஷிதரிசன (திருக்கழுக்குன்றம்) தேவரகஸ்ய படம் தனி அணா 0—1—0
100-படம் ரூபா 4—0—0

9. ஸ்ரீராஜராஜேஸ்வரி அம்பாள் படம் தனி 0—0—6
100-படம் ரூபா 2—0—0

10. ஸ்ரீலக்ஷ்மி படம். 0—0—6

11. திருக்கழுக்குன்றம் ஸ்தலபுராணம் 400 - பக்கம் கொண்டது தபாற் கூலியுட்பட ரூபா 3—0—0

12. ஷை 40-பக்கம் கொண்டது 0—2—0

13. மகா மகஸ்தலபுராணம் விலை அணா 0—2—0

14. திருவடிகோயில் மான்மியம் „ 0—1—0

15. அஷ்டோத்த ஸதநாமமஞ்சரி விலை ரூபா 1—0—0

16. ஸ்ரீ முத்துக்குமார சுவாமி ஆலய வைபவம் 0—6—0

நவசக்தி உப்பு :—

காலையில் நீராகாரம் - பசுமோர் - இளநீர் - மாலையில் சருக்கரை கலந்து சாப்பிட்டால், நீர்ச்சுருக்கு - நீர்க்கட்டு - அஷ்டவகை குன்மங்கள் - அஜீர்ணம் - செரியாமந்தம் - புளியேப்பம் - வாந்தி - சுரக்கட்டி - சூதகக்கட்டி - மஹோதரம் - நீராம்பல் - கவுசைக்கட்டி முதலிய ரோகங்கள் ஆச்சரியமாய் நீங்கும் - பத்தியமில்லை.

புட்டி 1-க்கு ரூபா 1—0—0

(2-ம் பக்கம் தொடர்ச்சி)

## சர்வ பித்த சம்ஹார சூர்ணம் :—

பத்தியமில்லை, சாப்பிடுதற்கு ருசியாயிருக்குமே தவிர அருவருப்புஇராது. காலையிலும்சாப்பிட்டவுடனே-இரவில் படுக்கும்போதும் கால்பலம் சாப்பிட்டால். அஜீர்ணம்-செரியாமந்தம் - ஊஷ்ணபேதி - வயிற்றிரைச்சல் புளியேப்பம் - வயிற்றுநோய் - குடல் வாய்வு - வாந்தி - வாய்நீர் ஊறல் - மயக்கம் - தலைவலி - முதலிய பித்த சம்பந்தமான ரோகங்கள் யாவும் ஆச்சரியமாய் நீங்கும்.

10-பலம் டப்பி 1-க்கு 1—0—0

☞ ரோகங்களால் பீடிக்கப்பட்டவர்கள் தங்களுக்குரிய ரோகங்களின் தன்மை-வயது ஜல மலங்களின் குறிப்பு முதலிய தெரிவித்தால், அதற்குரிய மருந்துகள் தயார் செய்து அநுப்புவோம். பல வகையான பஸ்பங்கள். செந்தூரங்கள் - வாய்வு எண்ணைகள் - கிருதங்கள் லேகியங்கள் - மாத்திரைகள் யாவும் உள்ளன:

☞ வயித்தியம் செய்து ஜீவிப்போர் அநேகர் நம்மிடமுள்ள ஔஷதங்களை வரவழைத்துப் பிணியாளர்களுக்குக் கொடுத்து, தாங்கள் ஜீவிப்பதோடு, கீர்த்தியும் அடைகிறார்கள். நம்முடைய முறைகள் யாவும் சித்தவயித்திய முறைகள். பதில் வேண்டுவோர் தபால் லேபில் அனுப்பவேண்டும்.

## ☞ நவசக்தி ஊதுவத்திகள் : —

அறுபத்து நான்கு வன மூலிகைகள் சேர்ந்த உயர்ந்த முறை: சந்தன அத்தர் - புநுகு - சவ்வாது - ஈரான் முதலிய சுகந்த வாசனையுள்ளது. மனோ வசிகரமுள்ளது.

முதல் தரமானது 1-பலம் 0—12—0

2-ம் தரம் 1-பலம் 0—8—0

தபாற் கூலி வேறு.

---

☞ வேண்டுவோர் தபாற்கூலிசேர்த்து, மணியார்டர் அனுப்பவேண்டும். (V.P.) வி.பி. மூலம் அனுப்ப இயலாது.

---

☞ பண்டிட் - S. R. நமசிவாய ராஜயோகி,

சுதேச வைத்தியம், P. O. திருக்கழுக்குன்றம்.

Printed at the Selvarangan Press, Madras.